30th August 1961]

நகரில் ஒரு பெரிய ஆஸ்பத்திரி உருவாகிக் கொண்டிருக்கிறது, எனவே அங்கு இந்தக் கல்லூரியை ஆரம்பிக்கும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** விருதுநகர் ஆஸ் பத்திரி ஒரு குட்டி ஆஸ்பத்திரி என்றுதான் சொல்லவேண்டும்.

*Pension*

* 1506 *Q.*—SRI A. A. RASHEED (On behalf of SRI T. T. DANIEL) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to increase the amount of pension of retired Government servants?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that the purchasing power of money has considerably gone down and, if so, will the Government consider to raise the amount of pension of retired Government servants?

THE HON. SRI C. SUBRAMANIAM : We have already raised it to a certain extent and this has been given effect to.

SRI J. MATHA GOWDER : ரிட்டயர்ட் அதிகாரிகளுக்கு பென்ஷன் கொடுப்பது போல் வயது முதிர்ந்த 60 வயதிற்கு மேற் பட்டவர்களுக்கு ஏதாவது பென்ஷன் கொடுப்பதற்கு அரசாங்கத் தினிடம் திட்டமிருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இந்தக் கேள்வி கவர்ன் மென்ட் சர்வென்ட்டைப் பொறுத்தது.

*District Revenue Officers*

* 1507 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any review of the working of the District Revenue Officers was made recently; and

(*b*) if so, the result of the same?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No.

(*b*) Does not arise.

**SRI M. KALYANASUNDARAM :** ஒரு கணிசமான கால அளவு இப்பதவி வகித்து வேலை நடந்து வருகிறது ஜில்லாவில், இதனால் எவ்வளவு அனுகூலம் ஏற்பட்டிருக்கிறது ? நிர்வாகத் திறமை எந்தளவு அதிகரித்திருக்கிறது என்பதை பரிசீலனை செய்யும் உத்தேசம் இனியாவது உண்டா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** அதிக காலமாக இல்லை. இனி கொஞ்ச காலம் போன பின்புதான் நிர்வாகம் எந்தளவு, எப்படியிருக்கிறதென்று பரிசீலிக்க வேண்டும்.

**SRI A. R. SUBBIAH MUDALIAR :** ரெவன்யூ ஆபீசருக்கு வேலை அதிகமாகயில்லை என்பதற்காக மேற்கொண்டு அவருக்கு வேலை தேடிக் கொடுப்பதாகத் தெரிகிறது. வேலை அதிகம் இல்லாதபோது அந்த் ஆபீஸர்கள் அவசியமா என்று யோசிக்குமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** வேலை ஒன்றும் அதிகமில்லை என்று அப்படிச் சொல்லவில்லை.

*Auditoria for High Schools*

*** 1508 *Q*.—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் மத்திய சர்க்கார் மான்யம் பெற்ற உயர்தர பாடசாலைகளில் கலாமன்றங்கள் (ஆடிடோரியம்) கட்டப் பட்டுள்ளதா ?

(இ) ஜில்லா வாரியாக எத்தனை பாடசாலைகளில் கட்டப்பட் டுள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir.

(இ)

| | | |
|---|---|---|
| 1. | Madras City ... ... ... ... ... | 3 |
| 2. | Chingleput district ... ... ... ... | 1 |
| 3. | Thanjavur district ... ... ... ... | 1 |
| 4. | Ramanathapuram district ... ... ... | 5 |
| 5. | Salem district ... ... ... ... | 1 |
| 6. | The Nilgiris district ... ... ... | 1 |
| 7. | Coimbatore district ... ... ... ... | 1 |
| | Total ... | 13 |

Two schools were selected for the construction of auditorium during 1960–61 (one in Coimbatore district and another in the Madras City) and the first instalment of grant for the purpose was sanctioned in March 1961.

9–00 a.m. **SRI R. SRINIVASA IYER :** ஸார், இந்த ஆடிட்டோரியம் கட்டுவதற்கு சுமார் எவ்வளவு ரூபாய் செலவாகிறது ? இதில் பொது மக்களின் விகிதம் என்ன ? அவ்வாறு கொடுக்க வேண்டுமா அல்லது சர்க்காரே கட்டிக்கொடுக்கிறார்களா ? இதற்கு என்னவெல்லாம் கன்டிஷன்கள் இருக்கின்றன ? எந்த விதமான கன்டிஷன்கள் எல்லாம் திருப்தியாக இருந்தால் இம் மாதிரியான ஆடிட்டோரியம் கட்டுவதற்கு சர்க்கார் உத்தரவு கொடுக்கும் ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதற்கு ஆகிற செலவில் 75 சத விகிதம் மத்திய அரசாங்கத்தார் கொடுக்கிறார்கள். அதற்கு ஒரு வரம்பும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் இவ் வளவு செலவாகும் என்று கணக்கிட்டு இருக்கிறார்கள். ரிக்ரியே